

ஓவியம்: அரூப் சிவராம்

# கசடதபற

ஆகஸ்ட் 1972 30 காசு

23

# கரிக் கோடுகள்

அறியாமைக்குப் பதில் சொல்லிக் கொண்டிருப்பது படைப்புச் சக்தியை விரயமாக்கும். ஆனால் அவ்வப்போது அவசியமாகிற கரிக் கீறல்களை அழித்துவிட்டு வீட்டுக்கு வெள்ளையடிக்கிற வேலை கவிதையை புரிந்து கொள்ளாமலிருப்பது தவறுமல்ல, குறையுமல்ல. தன்னுடைய ஆழாக்கு அளவில் குறைந்தது என்று தெரிந்து கொண்டும் அரிசி விற்பது நேர்மையற்றது.

ஆழ்ந்த அறிவுடன், பொறுமையுடன் ஒரு விஞ்ஞானியுடைய நாணயத்துடன் அணுகவேண்டியது, ஆராயப்பட இருப்பது இலக்கியத் திறனாய்வு. விமர்சகர் யாராக வேண்டுமானாலும் இருக்கலாம். இலக்கியம் மற்றவை அல்ல, சிவப்புமையில் எழுதியது தான் என்று அவர் கூறுதிருக்கவேண்டும். எழுதுபவனின் சட்டை நிறத்திலும் தலைமுடி நீளத்திலும் விமர்சனப் பார்வை பெரும்பாலும் நின்று நிலைத்து விடுகிறது. புதிய தரிசனங்களில் இவ்விமர்சகர்களின் கண்கள் கூசுகின்றன. தங்களையும் மீறி இலக்கியம் இருக்க முடியும் என்பதை ஒப்புக்கொள்ள முடியவில்லை இவர்களால். நேற்றே செல்லாது போன நோட்டால் நாளைக்கு நாடு பிடிக்கப் பார்க்கிறார்கள் இவர்கள்.

'தாமரை' ஜூலை 72 இதழில் ம. ந. ரா. ஞானக்கூத்தனின் எட்டுக் கவிதைகளைத் திறனாய்வு செய்திருக்கிறார். எட்டுக் கவிதைகளில் அவருக்குப் புரிந்தது மூன்றே மூன்று தானும். புரிந்த அளவைக் கொண்டு திறனாய்வு செய்திருக்கிறார் ம. ந. ரா.

ம. ந. ரா. விற்கு எட்டாத கவிதை ஒன்று, எட்டாவது கவிதை. தரிசனம் ஒன்றில் தானே சித்தனாகிப்போன கவிஞனின் தவிப்பும் ஆணவமும் ஞானக்கூத்தனின் கவிதை. ம. ந. ராவிற்கு, இக்கவிதை ஆண் பெண் உறவு பற்றியதாம், விரசமானதாம். கவிதை உள்ளடக்கத்தில் மட்டும் இல்லை என்பதை முதலில் ம. ந. ரா. புரிந்துகொள்ளவேண்டும். கோஷங்களில் மட்டும் கவிதையைக் காணும் ம. ந. ராவிற்கு இது கடினம். தூக்கத்து'க் கப்புறம் சித்தனாகிப்போன கவிஞன் தான் கண்ட காட்சியைக் கூற விழைந்து சொல்லாமல் போகிறான். இக்கவிதையின் உள்ளடக்கம் கவிதையின் தொனிதான். உள்ளடக்கத்தையும் தவறாகப் புரிந்து கொண்டு கவிதையையும் விட்டு விடுகிறார் ம ந ரா.

இரண்டாவது கவிதையின் உள்ளடக்கம் தேங்காய் விழுந்து இறந்தவனின் சாவு பற்றியது. நடப்பது விபத்து. விபத்து ஒரு அநீதியைக் கொண்டுள்ளது. புற உலகு ஒரு குரூரத் தன்மையுடன் மனிதன் எதிர்பாராத, பலவீனமான நிலையில் தாக்குகிறது. மனிதனின் உயிரையும் வாழ்வையும் பறிக்கும் சாவுக்கு நீதிப்படி தண்டனை ஏதும் கிடைபபதில்லை. தண்டிக்கமுடியாமல் தப்பிப் போகிற சாவின் குறியீடாக இக் கவிதையில் தேங்காய் உருவாக்கபபட்டுள்ளது. மனிதனுக்கு இழைக்கப்படும் அநீதியைக் கண்டு கவிஞர் பொறுமுகிறார். இக்கவிதையாக மாறும் கவிஞனின் மனிதாபிமானத்தை ம. நா. ராவின் கண்களில் உள்ள "போஸ்டர் மனிதாபிமானம்" மறைத்து விட்டது. ம. ந. ராவிற்கு ஞானக் கூத்தனின் 'கீழ்வெண்மணி" மறந்துவிட்டது.

மற்றது ஆறாவது கவிதை. ம. ந ராவிற்காக மறுபடியும் உள்ளடக்கம். "வேலை செய்" என்று உலகம் கூறிய நாறும் வார்த்தைகள் பொறுக்காது, தான் மூடமாக, பித்தனாக பிறக்காது போய்விட்ட ஒரு உடல் குறையற்ற மனிதனின் கேவல் அது. சொல் ஒன்றும் செயல் வேறொன்றுமாக உள்ள இந்த உலகம், தன் ஜீவனத்திற்கு விலையாய் இடும் வேலைகள் கவிஞனுக்குத் தவிர்க்க முடியவில்லை. பிறவியினால் தப்பிய காலூனர்களையும் குருடர்களையும் கண்டு தன்மேல் கழிவிரக்கம் கொள்கிறார். இவ்வுலகம் இடும் பணிகள் கவிஞரை கையாலாகாது செய்து விடுகின்றன. தன் நிறைகளைக்கூட காவு கொடுத்து உலகத்தின் வேலைகளிலிருந்து தப்பித்துவிட்டு இதே உலகத்தில் வாழ விழைகிறார் கவிஞர். தனக்குத்தானே இட்ட பணிகள் இருப்பதால். ம. ந. ராவிற்கு உலகம் இடும் வேலைகள் வேறுவிதமாகத் தோன்றலாம். விமர்சனம் எழுதுவதுதான் தனக்கு உலகம் இட்ட வேலை என்று ம. ந. ரா. எண்ணலாம். கக்கூசுகளையும், சாக்கடைகளையும் சுத்தம் செய்யும் கடமையை உலகம் அவரது கரங்களில் வலிந்து உபசரித்துத் திணித்திருப்பதாக ம. ந. ரா. கருதலாம். அவர் எங்கும் நுழைந்து சுத்தம்செய்யத் தொடங்கிவிடுகிறார். ஆனால் அவர் நுழைந்த பின்னர்தான் கோவில்களில் தூசுகள் படிகின்றன. தலைப்புகள் இல்லாமல் எழுதுவது புதுமையோ என்று வியக்கும் ம. ந. ராவிற்கு நினைவூட்டுகிறேன், புதுக் கவிதைகள் மட்டுமல்ல சங்க காலக் கவிதைகள் எவற்றிற்கும் தலைப்புகள் கிடையாது என்று.

பதி

# கடற்கரை

அலென் ரோப்-க்ரில்லெ

[அலென் ரோப்க்ரில்லெ சமீப காலத்தில் சர்ச்சைக்கு உட்பட்ட ஒரு பிரெஞ்சு எழுத்தாளர். ஓவியத்தைப் போலவே இலக்கியமும் இயங்கவேண்டும் என்ற பிடிவாதம் ரோப்க்ரில்லெயினது. ஆனால் டாகுமென்ட் தளத்திலே தேங்கவிடாமல், தான் கண்டவற்றை ஒன்றுக்கொன்று தொடர்பு படுத்தும் வகையில் குறியீட்டின் சாதனையையே ஏற்படுத்தும் வன்மை இவரிடம் உண்டு. முதல் பார்வைக்கு வெறும் சினி காமிரா மூலம் கண்ட காட்சி போலுள்ள 'கடற்கரை, உண்மையில், அதன் முதல் பார்வையிலேயே ஒரு கவியுணர்வை ஏற்படுத்துகிறது. தகவல்களாகத் தோன்றும் இக்கதையின் பாத்திரங்களும் கடல், கரை, பாறைத் தொடர், பறவைகள், மணியோசை முதலியனவும் போகப்போக அழுத்தம் பெறுகின்றன. எத்தனையோ விதமான உள்ளர்த்தங்களுக்கு இடம் தருகின்றன.]

கடற்கரையோரமாக மூன்று குழந்தைகள் நடந்து கொண்டிருக்கிறார்கள். ஒருவர் பக்கத்தில் ஒருவராக, கைகளைக் கோர்த்துக்கொண்டு அவர்கள்போகிறார்கள். அவர்கள் அநேகமாக ஒரே உயரமானவர்கள். ஒருவேளை ஒரே வயதானவர்களாகக்கூட— பன்னிரண்டு வயதானவர்களாக—இருக்கலாம். இருந்தாலும் நடுவில் செல்லும் குழந்தை மற்ற இருவரைவிடச் சிறியதாக இருக்கிறது.

இந்த மூன்று குழந்தைகளைத் தவிர அந்த நீண்ட கடற்கரை முழுதும் வெறிச்சோடியிருக்கிறது. ஓரளவு அகலமான, சீரான மணற் தொடர். தனித்த பாறைகளோ, நீர்த்தேக்கங்களோ கூட எங்கும் இல்லை. ஒரு பக்கத்தில் கடக்க முடியாததெனத் தோன்றும் செங்குத்தான பாறைத் தொடர்; மறுபுறம் கடல்; இடையே கடற்கரை கூட மிகக் குறைந்த அளவே கீழ்நோக்கிச் சரிந்திருக்கிறது.

வெய்யில் சுகமாகவே இருக்கிறது. மஞ்சள் நிற மணல் சூரியனின் தீவிரமான, குத்திட்ட ஒளியில் மின்னுகிறது. வானத்தில் ஒரு மேகங்கூட இல்லை. காற்றும் இல்லை. கடல்நீர் நீலமாகவும், அமைதியாகவும், விரிந்த கடலிலிருந்து மிகச் சிறிய அலைகள் இல்லாமலும் இருக்கிறது, கடல் கண்ணுக்கெட்டிய தூரம்வரை பரந்திருந்த போதும்.

ஆனால், ஒழுங்கான இடைவெளியில் எதிர்பாராமல் ஒரு அலை, எப்போதும் அதே அலை, கரைக்குச் சிறிது தூரத்தில் துவங்கி, திடீரென்று எழுகிறது. பிறகு உடனே ஒரே கோடாகக் கரையில் மோதுகிறது தண்ணீர் ஓடிவந்து வடிவதாகத்தோன்றவில்லை. மாறாக, அந்த முழு இயக்கமுமே ஒரே இடத்தில் நிகழ்த்தப்படுவதாகத் தோன்றுகிறது. நீரின் எழுச்சி கரையின் பக்கம் சிறு குழிவை உண்டாக்குகிறது. அலை சரளையின் சளசளப்புடன் சற்றே பின் வாங்குகிறது. பிறகு, சிதறி, பாலாகக் கரையின் சரிவில் பரவுகிறது. ஆனால் தான் இழந்த நிலத்தை மீண்டும் பெறுவதுதான் அது. எப்போதோதான் அது கூடுதலாக உயர்ந்து, ஒரு கணம் சில அங்குலங்கள் அதிகமாகக் கரையை நனைக்கிறது.

மறுபடியும் எல்லாம் அமைதியாகி விடுகிறது கடல்நீலமாக, சீராக, மஞ்சள் மணலில் ஒரே மட்டத்தில் வந்து நின்று விடுகிறது. மணலில் குழந்தைகள் ஒருவர் பக்கத்தில் ஒருவராக நடந்து கொண்டிருக்கிறார்கள்.

அவர்கள் ப்ளாண்ட் நிறக் குழந்தைகள், கடற்கரை மண்ணைப்போல. அவர்களின் சருமம் சிறிது தோய்ந்து, அவர்கள் தலைமுடி கொஞ்சம் வெளிர்ந்து இருக்கின்றன. அவர்கள் ஒரேமாதிரியான உடையணிந்திருக்கிறார்கள். தடிமனான, வெளிர்நீல லினனில் அரைநிஜாரும், சட்டையும். ஒருவர் பக்கத்தில் ஒருவராக, கைகளைக் கோர்த்துக்கொண்டு நேரே, கடலுக்கு இணையாக, குன்றிற்கு இணையாக, இரண்டிலிருந்தும் ஏறத்தாழ சம தூரத்தில், ஆனால் கடலுக்குச் சிறிது அருகேயே நடந்துகொண்டிருக்கிறார்கள். சூரியன் உச்சியில். காலடியில் அவர்களின் நிழல்கள் இல்லை.

அவர்களுக்கு முன்னே கன்னி மணற்பரப்பு: மஞ்சளாக, ஏற்ற இறக்கமின்றி, பாறையிலிருந்து தண்ணீர்வரை. குழந்தைகள் ஒரே நேர்க்கோட்டில், ஒரே வேகத்தில் சின்ன தடுமாற்றம் கூட இன்றி, அமைதியாகக் கைகளைக் கோர்த்துக்கொண்டு முன்னே போகிறார்கள். அவர்களுக்குப் பின்னால் சிறிதே ஈரமான மணலில் அவர்களுடைய வெறும் பாதங்களின் அடையாளங்கள் மூன்று கோடுகளில் பதிகின்றன: மூன்று ஒரேமாதிரியான சீரான பாத அடையாளங்கள், ஆழமாக, கலைக்கப்படாமல்.

குழந்தைகளின் பார்வை நேரே பதிந்திருக்கிறது. இடது பக்கம் உயர்ந்த பாறைத் தொடரையும் அவர்கள் பார்க்கவில்லை. மறுபுறம் சிறிய அலைகள் விட்டுவிட்டு மோதிச் சிதறும் கடலையும் பார்க்கவில்லை. திரும்பி, தாங்கள் கடந்துவந்த தூரத்தைப் பார்ப்பதாகக் கூட இல்லை. அவர்கள் ஒரேமாதிரியான, துரிதநடையில் தங்கள் வழியே தொடர்ந்து போகின்றனர்.

∴ ∴ ∴

அவர்களுக்கு முன்னே கடல் பறவைக் கூட்டம் ஒன்று, அலைகளின் நுனியில் கரையோரத்தில் நடந்து கொண்டிருக்கிறது. குழந்தைகளுக்கு நூறு கஜதூரத்தில், அவர்கள் போகும் திசையிலேயே, அவர்களுக்கு இணையாக நகர்ந்து கொண்டிருக்கின்றன. பறவைகள் அவ்வளவு வேகமாக நகராததினால், அவற்றைக் குழந்தைகள் நெருங்கிக் கொண்டிருக்கின்றனர். பறவைகளின் நட்சத்திர வடிவக் கால்களின் அடையாளங்களைக் கடல் தொடர்ந்து அழித்துக் கொண்டிருக்கிறது. குழந்தைகளின் பாதச்சுவடுகளோ, சிறிதே ஈரமான மணலில் தெளிவாகப் பதிகின்றன. மணலில் மூன்று சுவட்டுக்கோடுகள் நீண்டுகொண்டே வருகின்றன.

சுவடுகளின் ஆழம் ஒரேமாதிரி இருக்கிறது, ஒரு அங்குலத்திற்கும் குறைவாக. சுவடுகளின் ஓரங்கள் சரியாமலும், கால் நுனிவிரலோ, பின்பாதமோ மிக அழுந்திவிடாமலும், சுவடுகள் ஹீனமடையாமல் இருக்கின்றன. ஏதோ இயந்திரத்தினால் அழுத்தப் பட்டவைபோல.

இந்த முப்பட்டைக்கோடு வளர்ந்துகொண்டே போகிறது. அதே நேரத்தில் குறுகி, மெதுவே, கடற்கரையை இரண்டு துண்டுகளாக நீளவாக்கில் பிரிக்கும் ஒரே கோடாகக் கலந்து, மறு கோடியில் நுண்ணிய இயக்கமாக முடிகிறது. மாறிமாறி எழுந்து பதியும், ஆறு வெறுங்கால்கள், நேரத்தைப் புள்ளியிடுவதுபோல.

ஆனால் அவ்வெறுங்கால்கள் முன்னே நகர, அவர்கள் பறவைகளை அணுகுகின்றனர். அவர்கள் மணலில் வேகமாக முன்னேறுவது மட்டுமல்ல; பறவைகளுக்கும் அவர்களுக்கும் இடையில் இருக்கும் தூரம், அவர்கள் நடந்துவந்த தூரத்தைப் பார்க்கும்போது வேகமாகக் குறைந்து கொண்டே வருகிறது. ஒரு சில காலடிகள் தூரமே எஞ்சி இருக்கிறது.........

குழந்தைகள் கடைசியில் பறவைகளை நெருங்கிவிட இருக்கும்போது, அவை திடீரென்று தங்கள் சிறகுகளை அடித்துக்கொண்டு பறந்து விடுகின்றன. முதலில் ஒன்று, பிறகு இரண்டு, பிறகு பத்து.........

அந்த வெள்ளை, சாம்பல் நிறப் பறவைகளெல்லாம் கடலுக்குமேல் ஒரு வட்டமிட்டு, மறுபடியும் கீழே இறங்கி, மணலில் உட்கார்ந்து, நகர ஆரம்பிக்கின்றன. மறுபடியும் அதே திசை, அலைகளின் நுனியில், நூறு கஜங்களுக்கப்பால்.

இந்த தூரத்தில், கடல்நீரின் அசைவுகளை அநேகமாகக் காணமுடியவில்லை, பத்துவினாடிக்கொரு முறை உயர்ந்து சிதறும் நுரை சூரிய ஒளியில் ஒளிரும்போது தோன்றும் வண்ண மாறுதல்களின் மூலம் தவிர.

∴ ∴ ∴

அந்தக் கன்னி மணலில் தாம் கச்சிதமாகச் செதுக்கும் பாதையைக் கவனிக்காமலும், தங்களுக்கு வலதுபுறம் சிறிய அலைகளைக் கவனிக்காமலும், முன்னே பறந்தும், நடந்தும் கொண்டிருக்கும் பறவைகளைக் கவனிக்காமலும், ப்ளாண்ட் நிறக், குழந்தைகள் மூன்றும் ஒருவர் பக்கத்தில் ஒருவராக, ஒரே சீரான துரிதநடையில், கைகளைக் கோர்த்துக்கொண்டு முன்னே போகிறார்கள்.

அவர்களின் தலைமுடியைவிடத் தோய்ந்த, வெயில் ஏறிய முகங்கள் ஒரேமாதிரி இருக்கின்றன. முகபாவம் ஒரே மாதிரி இருக்கிறது: தீவிரமாக, சிந்தனை வசப்பட்டதாக, ஒருவேளை கொஞ்சம் பதட்டத்துடன். அவர்களில் இருவர் சிறுவர்கள் என்பதும் மூன்றாவது சிறுமி என்பதும் தெளிவாகத் தெரிந்தாலும் அவர்களின் உடலமைப்பு ஒரே மாதிரி இருக்கிறது. சிறுமியின் தலைமுடி கொஞ்சம் நீளமாக, சுருளாக, கைகால்கள் மெலிதாக இருக்கின்றன. ஆனால் அவர்களின் உடைகள் ஒரேமாதிரி இருக்கின்றன. தடிமனான வெளிர் நீல லினனில் அரைநிஜாரும் சட்டையும்.

சிறுமி வலது-கோடியில் கடல் பக்கம் நடக்கிறாள். அவளுக்கு இடது புறம் மற்ற இருவர்களில் சிறியவன். பாறைத் தொடரின் பக்கம் இருக்கும் சிறுவன் சிறுமியின் உயரத்திலேயே இருக்கிறான்.

அவர்களுக்கு முன்னே சீரான, மஞ்சள் மணல் கண்ணுக்கெட்டியதூரம் பரந்து கிடக்கிறது. அவர்களுக்கு இடது புறம் ஏறக்குறைய செங்குத்தான பாறைச்சுவர் கடக்க முடியாததைப் போல ப்ரௌன் நிறத்தில் எழுந்திருக்கிறது. வலது புறம் அசைவின்றி தொடுவானம் வரை நீலமாகக் கிடக்கும் கடல். எதிர்பாராத சிறிய அலை, கடலின் நீர்த்தளத்தை மடிப்பாக்கி, உடனே சிதறி, வெள்ளை நுரையில் திரும்பி ஓடுகிறது.

∴ ∴ ∴

பத்துவினாடிகளுக்குப் பிறகு, வீங்கி எழும் தண்ணீர் கரைப்பக்கம் குழிவை ஏற்படுத்துகிறது, உருளும் சரளையின் சளசளப்புடன்.

குட்டி அலை சிதறுகிறது: பாலாக நுரை கரையின் சரிவில் ஓடுகிறது; இழந்த சில அங்குலங்களை மீண்டும் பிடித்துக் கொண்டே. இதைத் தொடரும் நிசப்தத்தில் தொலைவிலிருந்து ஒரு மணியின் ஓசை அமைதியான காற்றின் வழியே கேட்கிறது.

"அதோ மணியோசை" சிறுவர்களில் சின்னவன், நடுவில் நடப்பவன் சொல்கிறான்.

சரளைக் கற்களை உறிஞ்சுவதைப் போன்ற கடலின் ஒலி மிக இலேசான மணியோசையை மூழ்கடிக்கிறது. தூரத்தினால் உருவிழந்து கொண்டிருக்கும் எஞ்சிய ஒலிகளைக் கேட்க, நிசப்தம் மறுபடியும் வரும்வரை அவர்கள் காத்திருக்கவேண்டும்.

"இது முதல் மணி" என்கிறான் பெரிய பையன். வலதுபுறம் சிறிய அலை ஒன்று சிதறுகிறது.

மறுபடியும் அமைதி திரும்பும்போது, அவர்களால் இனி எதையும் கேட்க முடியவில்லை. ப்ளாண்ட் நிறக் குழந்தைகள் மூன்று இன்னும் அதே ஒழுங்கான இசைவில், கைகளைக் கோர்த்துக் கொண்டு நடந்துகொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு முன்னே, சில காலடிகளை தொலைவில் இருந்த பறவைக் கூட்டம் எதிர்பாராத சத்தக்கு ஒரே நேரத்தில் வசப்படுகிறது: அவை சிறகுகளை அடித்துக்கொண்டு பறந்து விடுகின்றன.

அவை கடலுக்கு மேல் முன்பு போலவே வட்டமிட்டு, கீழே மணலில் இறங்கி, நடக்க ஆரம்பிக்கின்றன. அதே திசையில், அலைகளின் நுனியில், நூறுகஜங்களுக்கப்பால்.

∴ ∴ ∴

"ஒரு வேளை அது முதல் மணி இல்லையோ என்னவோ," சின்னவன் தொடர்கிறான். "அதற்கு முன் ஒலித்ததை நாம் கேட்டிராவிட்டால்......"

"எப்படியும் அதுவும் கேட்டிருக்கும்" அவனுக்கு அடுத்தவன் சொல்கிறான்.

இதனால் அவர்களின் நடைவேகம் மாறவில்லை. அதே சுவடுகள், அவர்களுக்குப் பின்னே அவர்கள் போகப் போக, ஆறு வெறுங்கால்களடியில் தொடர்ந்து தோன்றுகின்றன.

"இதற்கு முன்னால் இவ்வளவு அருகில் நாம் இருந்ததில்லை" என்கிறாள் சிறுமி.

சிறிது நேரத்திற்குப்பின் சிறுவர்களில் பெரியவன், குன்று பக்கம் இருப்பவன் சொல்கிறான் "நாம் இன்னும் ரொம்ப தூரத்தில் இருக்கிறோம்". மூவரும் அமைதியில் நடக்கிறார்கள்.

அமைதியான காற்றின் வழியே, இன்னமும் தெளிவில்லாது, மணியோசை மறுபடியும் கேட்கும் வரை இப்படியே அமைதியாக நடக்கிறார்கள். பெரியவன் சொல்கிறான்: "அதோ மணியோசை". மற்றவர்கள் பதில் சொல்லவில்லை.

பறவைகளை அவர்கள் நெருங்க இருக்கையில் அவை சிறகுகளை அடித்துக்கொண்டு பறந்துவிடுகின்றன. முதலில் ஒன்று, பின் இரண்டு, பிறகு பத்து......

பிறகு அப்பறவைக் கூட்டம் முழுதும் மணல் மீது உட்கார்ந்து நகர்கின்றது; கரையோரமாக, நூறு கஜங்களுக்கப்பால், அவர்களுக்கு முன்னே.

கடல் தொடர்ந்து அவற்றின் நட்சத்திர வடிவச் சுவடுகளை அழித்துக் கொண்டிருக்கிறது. பாறைத் தொடரின் சமீபத்தில் ஒருவர் பக்கத்தில் ஒருவராக, கைகளைக் கோர்த்துக் கொண்டு நடக்கும் குழந்தைகள் ஆழ்ந்த பாதச் சுவடுகளை தங்களுக்குப்பின்னே, அவற்றின் முப்பட்டைக்கோடு, கரைக்கு இணையாக, அந்த நீண்ட கடற்கரைக்குக் குறுக்கே நீண்டு விழ, பதித்துக் கொண்டே போகிறார்கள்.

வலது புறம், அசைவற்ற அமைதியான கடல், அதே இடத்தில் அதே சிறிய அலை சிதறிக் கொண்டிருக்கிறது.

[பிரெஞ்சு மூலம்: Alain Robbe–Grillet.
ஆங்கில மொழிபெயர்ப்பின் தமிழாக்கம்; ராமகிருஷ்ணன்.]

---

# அக்கம் பக்கம்

'ஓர் எழுத்தாயுத மாத ஏடு' என்ற பிரகடனத்தோடு 'அஃக்' வந்துள்ளது. முதல் இதழ் ஜூன் 72) 'அம்பை'யின் நாடகம், கி. ராஜ நாராயணனின் சிறுகதை, வெ. சாமிநாதனின் கட்டுரை, க.நா.சு. 'எழுத்து'வில் எழுதிய கட்டுரையின் மறுபதிப்பு ஆகியவைகளோடு நமக்குக் கிடைத்திருக்கிறது. 'அம்பை'யின் நாடகத்தில் என்னால் ஒரு புதுமையையும் காண முடியவில்லை. உரையாடல்கள் இ.பா.வை. நினைவு படுத்துகின்றன. இது ஒரு சோதனை நாடகம் என்ற அளவில் வர வேற்கப்படவேண்டும். 'அஃக்' ஆசிரியர் பரந்தாமன், பத்திரிகையில் அவருடைய குறுக்கீடுகள் எதுவும் தெரியவில்லை. இலக்கியப் பிரக்ஞை பரவலாக ஏற்பட்டு வரும் இந்த கால கட்டத்தில் 'அஃக்' போன்ற இலக்கிய ஏடுகள் தேவை. தனிப்பட்ட ஒருவரின் முயற்சியாக இதைக் கருதாமல் எல்லோரும் இதில் பங்கேற்று வலிமை சேர்க்க வேண்டும். முழுக்க முழுக்க வளரும் இலக்கியத்திற்காகவே தன்னை அர்ப்பணித்துக் கொள்ளும் சிறிய பத்திரிகைகளுக்கு இது மிகமிக அவசியம். (முகவரி: ஆசிரியர், அஃக், அம்மாபாளையம், சேலம்-5. ஆண்டுச் சந்தா: ரூ. 5/- தனி இதழ்: 40 காசு.)

⁂

ஜூலை முதல் வெளிவரும் கலை இலக்கிய மாத இதழ் 'வண்ணங்கள்'. எழுத்து, தாமரை, தீபம், கணையாழி, கசடதபற, ஞானரதம், வானம்பாடி வரிசையில் மலர்வதாகச சொல்லிக் கொள்ளும் இதன் இலக்கியப் பணியைப் பொறுத்திருந்துதான் சொல்ல வேண்டும். (முகவரி: ஆசிரியர், "வண்ணங்கள்", 119-A, லால்பகதூர் வீதி, பாண்டிச்சேரி-1. ஆண்டுச் சந்தா: ரூ. 4-00. தனிப் பிரதி: 30 காசு).

# புதுமலர்கள்

(புதுமலர்கள்—இலக்கிய வட்டத்தின் முதல்கூட்டம் 23-7-72ல் நடந்தது. தாமரை, தீபம், கசடதபற, கணையாழி பத்திரிகைகளின் 1971 வருடத்திய இதழ்களைப் பற்றி முறையே முத்துசாமி, சித்ரபாரதி, தி. க. சி., எம். எஸ். தியாகராஜன் விமர்சித்தார்கள்.)

'தாமரை'யைப் பற்றிப் பேசிய ந. முத்துசாமி, அக் கூட்டத்தில் சல சலப்பையும் மீறிய ஒரு இக்கட்டான நிலைமையை ஏற்படுத்தி விட்டார். காரணம் அவரல்ல, கீழ் மட்டக் குடிமகனை அமெரிக்காவில் கருதப்படும் நீகிரோ கலைத்துறையைத் தனது தன்னுணர்வுக்கு உபயோகப்படுத்துவது போல தமிழில் கீழ் மக்களாகக் கருதப்படுவோர் செய்ய படைப்புணர்வும், அதற்கு உந்துதலும் இல்லையென்றும், ராஜராஜ சோழனை அவனை அடையாளம் காட்டி அவனை ஏமாற்றும் வேலைதான் நடைபெறுகிறது என்றும் குறிப்பிட்டார். உடனே இதைப் புரிந்துக் கொள்ளாமல் கோவி. மணிசேகரன் கூட்டத்தின் ஒழுங்கை மீறும் கூச்சல்தனத்தை ஆரம்பித்து வைக்க வேறு சிலரும் தொடர்ந்தனர். (கோவி. மணிசேகரன் ராஜராஜ சோழன் போன்றவர்களைத் தனது சரித்திரக் கதைச் சரக்காக உபயோகிப்பவர் என்பது கவனிக்கத் தக்கது.)

'தாமரை'யில் பிரகாஷ் எழுதிவரும் பிராந்தியக் கதைகளை வாய்க் கூற்றாகச் சொன்னவர்களின் கொச்சையிலேயே எழுதியுள்ளதற்காகவும், அடிக்கடி பிரசுரமாகும் கிராமியப் பாடல்களுக்காகவும் ந. மு. பாராட்டினார். கடப்பாரையால் கொசு அடிப்பது போல் 'தாமரை' இதழ் தவறாமல் கவிதை வடிவில் அரசியலையும் 'பாட்டாளி வேதனை'களையும் சொல்லி வருகிறதே, அது கவிதைத் தொழிலா அல்லது ஒப்பாரியைக்கூட பாட்டாகச் சொல்கிறார்களே அந்த மாதிரி விவகாரமா என்பது பற்றி ந. மு. சொல்லாதது ஒரு குறைதான். ஆனால் 'தாமரை' எதுபோன்ற கவிதைகளைப் பிரசுரிப்பது அதன் நோக்கத்துக்கு இணங்கும் என்று பார்த்து 'கசடதபற'வில் வெளிவந்த ஜாதிக் கலப்பு பற்றிய கவிதை ஒன்றை அது சீர்திருத்த நோக்கை உள்ளடக்கி அதையும் மீறி எழும் கவிதையாக வந்திருப்பதை ந. மு. சுட்டிக் காட்டினார்.

மௌனி, க. நா. சு. வழிபாட்டில் 'கசடதபற' ஈடுபட்டுள்ளதாக தி. க. சிவசங்கரன் 'கசடதபற' பற்றிய தமது பேச்சில் குறிப்பிட்டார். க.நா.சு.வின் விமர்சனத்தில் விமர்சனத்தைவிடப் பட்டியல்தான் அதிகம் என்பது தமிழ் விமர்சனத் துறையோடு பரிச்சயம் உள்ளோர்க்கு நன்கு தெரியவந்த விஷயம். எனினும் விமர்சனத்தை வற்புறுத்தி அதற்குத் தமிழில் ஒரு இடத்தையும் ஏற்படுத்தி வைதத முன்னோடி அவர். அவரது பட்டியல் விமர்சனத்தை மீறி சி. சு. செல்லப்பாவிலிருந்து வெ. சாமிநாதன் வரை எழுத்தாளர்கள் செயல்பட்டு வருகிறார்கள். ஆனால் க.நா.சு. வழிபாடு என்று குற்றம் சாட்டும் தி.க.சி.யோ க.நா.சு.வின் பட்டியல் விமர்சனத்தையே இன்றும் செய்து கொண்டிருக்கிறார். இந்த மாதிரி யார் வழிபடுகிறார்கள் க.நா.சு.வை? ஒரு ஆசிரியனின் ஸ்தானத்தைப் பற்றி பேசுவோரை விட, அவனைப் பார்த்துக் காப்பியடிப்பவர்கள்தான் அவனை வழிபடுகிறார்கள்.

ஒவ்வொரு தடவையும் பேனாவைத் தூக்கு முன் மௌனியின் 'மாறுதலை'ப் படிததுவிட்டுத்தான் பேனா தூக்குவதாகக் கூறியிருக்கிறாரே ஒரு மாஜி—கம்யூனிஸ எழுத்தாளரான ஜெயகாந்தன், அவர் செய்வது வழிபாடா? மௌனியைப் பற்றிய விமர்சனக் கட்டுரையைப் பிரசுரிப்பது வழிபாடா? 'கசடதபற'வைக் கலகக்காரர் பத்திரிகை என்று வர்ணிக்கும் தி.க.சி. பயங்கரக் கலகம் ஒன்றின் கருவைத் தமது குருட்டுத் தனத்தில் ஏற்றுக் கொண்டு விட்டார். 'புனித ஜெனே' என்ற கட்டுரையை 'நன்றாக இருக்கிறது' என்று சொல்லி விட்டார். அக்கட்டுரையின் விஷயாம்சத்தை சிறிதளவேனும் உணர்ந்திருந்தால், கம்யூனிஸத்துக்குத் தமது உடல், பொருள், ஆவி முழுவதையும் அர்ப்பணித்திருக்கும் தி.க.சி. தலைமயிரைப் பிய்த்துக் கொண்டு "கடதபற ஒழிக" என்று அலறி இருக்க வேண்டும். ஒருவேளை கம்யூனிஸ நோக்கங்களை என்ன என்பதை தி.க.சி. மறந்துவிட்டு வெறும் வார்த்தை அடுக்குகளினுள் நின்று சர்க்கஸ் காட்டுகிறாரோ? கூட்டத்திற்கு 'சிம்ம சொப்பனம்' என்று அறிமுகப்படுத்தப்பட்ட இவர் கம்யூனிஸக் கூடாரத்துள் நன்கு பழகி சாதுவாகிவிட்ட ஒரு சர்க்கஸ் சிங்கம் போலும்—இல்லாவிட்டால் எங்கிருந்தோ வந்த 'ஜெனே' இவர் வாய்க்குள் தலையை விட்டும் தப்பித்திருக்க முடியுமா?

டி. ஏ. சீவ்

---

## வான்கோழி

கடலைப் பார்த்து
தூசியைத் தூக்கி
அலையாய் போட்டது
தார் ரோடு
கையைக் கொட்டி சின்ன பயல்கள்
கண்ணைக் கசக்கித் தடுமாற.

—பாலகுமாரன்

# கண்ணன் என் தம்பி*

ஒரு கவிஞருடைய கவிதைகளில் எத்தனைக் கவிதைகளைப் படித்தால் அவரை நாம் தெரிந்துகொள்ள முடியும் என்று ஒரு கேள்வி உண்டு. இத்தனை என்று வரையறை இல்லாததனால் ஓரளவு, குறைந்தது பத்து அல்லது பதினைந்தாவது இருக்கலாமா, கணிசமான கவிதைகளைப்படித்தால் தெரிந்து கொள்ள முடியும என்று ஒரு பதிலும் உண்டு. கவிதைகளை அவற்றில் எடுத்துக்கொண்ட பொருள்களை வைத்துக்கொண்டு எவ்வளவு திறமையாகச் சொல்லுகிறார் என்பதைப் பார்த்தால் ஒருவர் தகுதிவாய்ந்த கவிஞர்தானா என்பதைச் சொல்லிவிட முடியும் என்று எனக்குத் தோன்றுகிறது. சொல்லிய விஷயத்தில் சிறப்பு இருந்தாலும், இல்லாவிட்டாலும், இந்தக் கவிதை எழுதுகிறவருக்கு இன்னின்னது கைகூடும் என்பதையும் கூடச் சொல்லி விடலாம்.

ஷண்முகசுப்பையாவின் 25 கவிதைகள் குழந்தைகளுக்காகவோ அல்லது குழந்தையைக் கருதிக் குழந்தைகள் அல்லாதவர்களுக்காகவோ எழுதப்பட்டுள்ளன. 25-ல் சந்தை என்ற கவிதையை ஒரு விவகாரமும் இல்லாமல் யாரும் எடுத்துப் போட்டுக் கொண்டு விடுவார்கள் என்றால்? காவல், குச்சு நாய், துயில், துட்டு போன்ற கவிதைகள் இன்றைக்கு இலக்கிய சர்ச்சைக்குத் தூபமிடக் கூடியவையாக உள்ளன.

'நீட்டிடுவான்', 'பார்த்திடவே', 'கூறிடுவாய்' என்று பல இடங்களில் 'இடு' என்ற சொல்லை சுப்பையா பயன்படுத்தும் போது ஒரு போலிச் செய்யுள் உணர்வு விரசமாகத் தோன்றுகிறது. இந்தத்தொகுதியில் சுப்பையாவின் சிக்கனமும், மெல்லிய சப்தநயமும் நம்மைக் கவர்கின்றன. இன்னும் முதிர்ந்து இனிவரும் கவிதைகள் நினைவில் தங்கும் தன்மைபெறக்கூடும் என்று எதிர்பார்க்கலாம். சுப்பையாவின் எளிமை அவரையே ஏமாற்றி விடுகிறது என்பதைச் சொல்லிவிடவேண்டும். எடுத்தெழுதத் தகுதி பெறாத அளவுக்குப் பொதுத் தன்மை உள்ள விஷயங்களைக் (2-ம் 'குச்சு நாய்', 'கறுத்த பறவை' 'இரட்டைக் காளை வண்டி') கூட சுப்பையா எடுத்துக் கொள்வதற்கு இந்த எளிமைதான் காரணமோ என்று நினைக்க வேண்டியிருக்கிறது.

'கவலை', 'கறுத்த பறவை' ஆகிய இரண்டு கவிதைகளும் வேறு இரண்டு பழங் கவிதைகளைக் கருத்தளவில் நினைவூட்டுகின்றன.

விளக்கமோ, பாராட்டுதலோ தேவைப் படாத அவருடைய கவிதை 'சந்தை'.

திங்கள் தோறும்
எங்களூரில்
சந்தை கூடும்
சந்தைக்கு
மந்தை மந்தையாய்
மாடுகள்
மக்களுடன்
வந்து சேரும்
வந்து சேர்ந்தால்
பின்னர்
சந்தை கலையும் வரை
மாடுகளுக்காய்
மக்களுக்குள்
நடக்கும் பேரம்
ஒரே ஆரவாரம்!

—ஞானக்கூத்தன்

* 'கண்ணன் என் தம்பி' (கவிதைகள்) ஆசிரியர்: ஷண்முக சுப்பையா. கிடைக்குமிடம்: தாஸ் புக் ஸெண்ட்டர், நாகர்கோயில். விலை 1.50.

---

## நிறம்

நேற்று
கருப்பு மாடு
வெள்ளைப் பால்
கறந்ததென்றேன்.

'ஆ' வென்று
வாய் பிளந்தான் மனிதன்.

'இன்று
வெள்ளைப் பணத்தை
நிறம் மாற்றும் போது,
மறந்தும்
மனம் கருப்பதில்லையே
நீ!' என்றேன்.

அவன் கொட்டாவி விட்டான்.

—எஸ். வைதீஸ்வரன்

Published by N. Mahaaganapathy 47, Nallathambi Mudali Street, Madras-5 Printed by M. K. Swamy at Prem Press, 8, M. K. Amman Koil St., Madras-4. Edited by N. Krishnamurthy No. 1, Devadi Street, Madras-4